[11th August 1960

(ஆ) சிவாஜிமா செலுத்திக்கொண்டு மேற்கண்ட தரிசு நிலங்களை உழுது வருபவர்களுக்குள் ஹரிஜன விவசாயிகள் எத்தனை பேர்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) & (b) The public interest served by answering the questions will not be commensurate with the time and labour involved in collecting the particulars for the answer.

SRI P. G. MANICKAM : 'சிவாஜிமா' செலுத்திக்கொண்டு இந்த நிலங்கள் உழுபவர்களுடைய எண்ணிக்கையை ஜில்லா கலெக்டர் மூலம் வெகு சுலபமாகத் தெரிந்துக் கொள்ளக்கூடும். அவர்கள் கந்தாயம் செலுத்துகிற நிலங்களை அந்த ஹரிஜனங்களுக்கே பட்டா போட்டுக் கொடுக்க வேண்டுமென்று சர்க்கார் கண்டிப்பாக ஜில்லா கலெக்டர் அவர்களுக்கு ஒரு உத்தரவு போட்டால், ஜில்லா கலெக்டர் அந்த நிலங்களை ஹரிஜனங்களுக்கு வழங்குவார்கள். ஆகையால் கவர்ன்மெண்டார் இது விஷயமாகத் தக்க நடவடிக்கை எடுப்பார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் கோருவது நிலம் தாராளமாக ஹரிஜனங்களுக்கு 'அஸைன்' பண்ணவேண்டுமென்பது. அதையெல்லாம் மனதில் வைத்து இப்பொழுது நிலம் இல்லாதவர்களுக்கு, குறிப்பாக ஹரிஜனங்களுக்கு, இம்மாதிரி நிலங்களை விநியோகம் செய்ய வேண்டும் என்று இப்பொழுது ஏற்பாடாகி, அதற்காக ஸ்பெஷல் தாசில்தார், டெப்யூடி கலெக்டர் ஆகியோர்களை நியமனம் செய்து வேலை நடந்து கொண்டிருக்கிறது.

9-00 a.m. SRI M. K. SOMASUNDARAM : ஸார், இம்மாதிரிப் புறம்போக்கு நிலங்களை ஹரிஜன மக்கள் 12 வருஷங்களாக அனுபவித்து வந்திருப்பதனால், அதை அவர்களுக்கே ஜாரி பண்ணிக் கொடுக்காததற்குக் காரணம் என்ன? அது சம்பந்தமாக கலெக்டருக்கு தகுந்த உத்தரவு போட சர்க்கார் முன் வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : உத்தரவு சென்ற மாதம் கூட அனுப்பப்பட்டது.

## *Tamilnad Plantation Union*

*108 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to recognise the registered Tamilnad Plantation Union?

THE HON. SRI R. VENKATARAMAN : It is presumed that the Hon. Member refers to the request made by the Tamilnad Plantation Workers' Union, Valparai, for recognition of the Union by the Cinchona Department for the purpose of representing the workers of the Government Cinchona Plantations in the Anamalais. If so, the matter is under consideration of the Government.

11th August 1960]

**Sri N. K. PALANISAMI** : Sir, while the INTUC which has got only 2,000 members has been recognised, the AITUC having a membership of more than 10,000 has not been recognised. May I know why there is delay in recognising it?

**The Hon. Sri R. VENKATARAMAN** : The AITUC has not furnished the list of members called for by the Government.

**Mr. SPEAKER** : The Hon. Minister for Works is not in Madras. We shall postpone his question No. 109.

*Supervisors for the Co-operative Agricultural Farms*

*** 110 *Q*.—Sri M. P. SARATHI** : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

கூட்டுறவு விவசாயப் பண்ணைகளில் மேற்பார்வையிட நியமிக்கப்பட்டுள்ள அதிகாரிகள் விவசாயத் துறையில் விசேஷப் பயிற்சி பெற்றவர்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : Senior Inspectors of Co-operative Societies who supervise and manage Co-operative Farming Societies have not undergone any special training in agriculture. But they are assisted by Agricultural Demonstration Maistries or Agricultural Fieldmen.

**Sri S. M. ANNAMALAI** : ஸார், இப்படி விவசாயப் பண்ணைகளில், சீனியர் இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கும் போது, ட்செயினிங் இல்லாமல் இருப்பதால், அவர்களுக்கு நிலத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாமல் இருக்கிறது. ஆகையினால், அவர்களுக்கு ட்ரெயினிங் கொடுத்து, அதன் மூலமாக அவர்கள் அதிக உபயோகமுள்ளவர்களாக இருக்க சர்க்கார் அவர்களுக்கு ட்ரெயினிங் கொடுக்க முன் வருவார்களா ?

**The Hon. Sri R .VENKATARAMAN** : இதிலே இரண்டு பிரச்சினைகள் இருக்கின்றன. ஒன்று, விவசாயத் தொழில் பயிற்சி; இரண்டாவது கூட்டுறவுப் பயிற்சி. கூட்டுறவுப் பயிற்சி பெற்றிருக்கிறவர்கள், பணம் கடன் வாங்குவது, கடனை விநியோகம் செய்வது, நிர்வாகம் இவற்றிலெல்லாம், கவனம் செலுத்திக்கொண்டிருக்கிறார்கள். விவசாயத்தைப் பற்றிய அலுவல்களை, அக்ரிகல்சர் பீல்ட்மென், டெமான்ஸ்டிரேடர் இவர்கள் கவனிக்கிறார்கள். சாதாரணமாக சீனியர் இன்ஸ்பெக்டர்களுக்கு குறைந்த காலப் பயிற்சி அளிப்பதனால், அவர்கள் எல்லாப் பயிற்சியும் அடைய முடியாது.

**Sri A. GOVINDASAMY** : கூட்டுறவுப் பண்ணை வைப்பதன் நோக்கம், உற்பத்தியைப் பெருக்குவது என்பதினால், விவசாயத்தில் கூட்டுறவுப் பயிற்சியும் அளிக்க அரசாங்கம் முயற்சிக்குமா ?

**The Hon. Sri R .VENKATARAMAN** : அதைத்தான் இப்பொழுது சொன்னேன், இதிலே விவசாயப் பயிற்சி ஒன்று, நிர்வாகப்